"காந்தி" பிரசுரம் நெ.2. விலை ஒரு அணா.



சோவியத் ருஷியா

அல்லது

# ருஷிய புரட்சி



லெனின் பேசும் காட்சி.

"காந்தி" ஆபீஸ்
சென்னை.
[முதல் பதிப்பு]

ரங்கூன் ஏஜண்டுகள்:—
காந்தி கத்தர் நிலையம்,
133, மொகல் தெரு,
ரங்கூன்

"காந்தி" பிரசுரம் நெ. 2.

# சோவியத் ருஷியா

உலகத்தில் ராஜ்யங்கள் ஸ்தாபிக்கப்படுவது எத்தனை சகஜமோ, அத்தனை ராஜீயப் புரட்சிகள் உண்டாகி, ராஜ்யங்களழிந்துபோவதும் சகஜமென்பதே சரித்திராசிரியர்களின் தீர்மானம். ஆனால், பூர்வகாலத்தில் உண்டான ராஜ்யப் புரட்சிகளுக்கும், சமீபகாலத்தில் உண்டானவைகளுக்கும் இடையில் பெருத்த வித்தியாசங்கள் இருக்கின்றன. எப்படி யென்றால், பூர்வத்தில் ஓர் தேசத்தில் அரசாட்சி செய்து கொண்டிருந்த ஓர் ராஜ வம்சத்தார், காலக்கிரமத்தில் சுகபோகங்களாலும், வேறு பல காரணங்களாலும் பலவீனராகி, அவரைக் காட்டிலும் சக்திமான்களாகிய வேறொரு வம்சத்தினர் தோன்றி, அவர்களை அழித்துவிட்டு அவ்விராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொள்வது வழக்கம். அக்காலங்களில் நிகழும் சம்பவங்களை ராஜ்யப் புரட்சி யென்று சொல்லுவது தகும். ஏனென்றால், ஓர் ராஜ்யம் ஒருவர் கையிலிருந்து வேறொருவர் கைக்கு மாறுங்காலத்தில், அதின் நிலைமையில் அநேக அடிப்படையான மாறுதல்கள் ஏற்படும். பழைய அதிகாரிகளும், பிரபுக்களும் தம் பதவிகளையும், ஆஸ்திகளையும், உயிர்களையுங்கூட இழந்து விடு

வார்கள். படையாட்களிற் பலர் மாண்டும், இன்னும் பலர் காயமடைந்தும், அவர்களும், அவர்கள் குடும்பத்தாரும் மிகுந்த கஷ்டங்களை யனுபவிப்பார்கள். பிரஜைகளிலும் அநேகர் தம் பொருளையும், உயிரையுங்கூட இழப்பார்கள். பழைய ராஜீய சட்டதிட்டங்கள் மாறி, புதிய சட்ட திட்டங்கள் அமுலில் வரும். புதிய ராஜவம்சத்துடன், புதிய அதிகாரிகளும், தலைவர்களும் தோன்றுவார்கள். இவ்வாற ராஜ்யங்கள் கைமாறுங் காலத்தில் சகஜமாக ஏற்படுங் குழப்பங்களையே முற்காலத்தில் ராஜ்யப் புரட்சி யென்று சொல்லுவது வழக்கம்.

## நவீனப் புரட்சிகள்.

ஆனால், சென்ற முன்னூறு வருஷங்களுக்குள்ளாக உலகத்தில் உண்டாயிருக்கும் ராஜ்யப் புரட்சிகளின் தன்மை முற்றிலும் வேறுவிதமாயிருக்கின்றது. சென்ற முன்னூறு வருஷங்களிலேயே உலகத்தில் ஜன சுதந்திரம் என்ற ஓர் புதிய உணர்ச்சி தோன்றியது. அரசனுடைய அதிகாரத்தின் அளவு என்ன, பிரஜைகளது உரிமைகளின் அளவு என்ன என்ற கேள்விகள் தோன்றின. அது முதல், அரசர்களுக்கும் பிரஜைகளுக்குமிடையே நீடித்த விரோதமும், சண்டையும் தொடங்கின. அப்போது ஆரம்பித்த சண்டை இன்னும் முடியவில்லை. அது முதல் இதுவரை, உலகத்தின் ராஜீய நிலைமை குழப்பமாகவே யிருக்கின்றது. அது முதல் உலகத்தில் குடிவுரிமை, குடியாட்சி இவைகளை யொட்டிய விவாதங்களும், சண்டைகளும் தோன்றாத தேசமேயில்லை. அதுமுதல் அதாவது, சென்ற முன்னூறு வருஷங்களில், உலகத்தில் குடிவுரிமைகளை யொட்டி, பதினைந்து பெரிய

ராஜீயப் புரட்சிகள் உண்டாயிருக்கின்றன. இப்புரட்சிகளின் பயனாக, உலகத்தில் சிறிது சிறிதாக அரசர்களது ஆதிக்க மொழிந்து, பிரஜைகளது ஆதிக்கம் தலையெடுத்து வேரூன்றிக்கொண்டு வருகின்றது. பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் குடிகளின் உரிமைகளையொட்டி உண்டான போரின் பயனாக, ஓர் அரசன் (முதலாவது சார்லெஸ்) தன் முடியிழந்ததுமன்றி, உயிரையும் இழக்க நேர்ந்தது. அது முதல் இங்கிலாந்தில் அரசரது ஆதிக்கம் நாளடைவில் குறைந்து, பிரஜைகளது ஆதிக்கம் மேலிட்டு, இப்போது அந்நாட்டில் முற்றிலும் பிரஜைகளது ஆதிக்கமே நடந்து வருகிறது. பெயருக்கு மாத்திரம் அரசனென்றொருவர் இருந்த போதிலும், நாட்டின் ஆட்சியை யொட்டிய சகல விஷயங்களும் ஜனப்பிரதிநிதிகளடங்கிய பார்லிமெண்டு சபையாராலும், அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரி சபையாராலுமே நடத்தப்பட்டு வருகின்றன. பதினெட்டாம் நூற்றாண்டின் அந்திய பாகத்தில் பிரான்சு தேசத்தில் தோன்றிய ஜனப் புரட்சியின் பயனாக, அந்நாட்டு மன்னர் (பதினாறுவது லூயி) தன் முடியிழந்தது மன்றி, குடும்பத்தாருடனும் பந்து மித்திரர்களாயிருந்த பல பிரபுக்களுடனும், கில்லோட்டீன் என்னும் தலைவாங்கி யந்திரத்தில் உயிரைத் துறக்கவும் நேர்ந்தது. அது முதல் பிரான்சு தேசம், இடையில் சில சில காலங்களைத் தவிர்த்து, பூரணமான குடியாட்சியாகி, இப்போதும் அவ்வாறே இருந்து வருகின்றது. இந்தப் பிரான்சு தேசத்தின் ராஜீயப் புரட்சியை, உலகத்தில் இதுவரையில் தோன்றிய மற்றெல்லாப் புரட்சிகளைக் காட்டிலும் மிகவும் பயங்கரமானதென்று சரித்திராசிரியர்கள் கூறுகின்றார்கள். பத்தொன்பதாம் நூற்

றூண்டின் மத்திய பாகத்தில் இட்டாலி தேசத்தில் தோன்றிய ஜனப்புரட்சியின் பயனாக, அந்நாடு ஆஸ்டிரியாவின் கொடுங்கோலினின்றும் விடுபட்டு, ஐனாதிக்கத்தைத் தழுவிய சுதந்திர நிலைமையை யடைந்தது.

இருபதாம் நூற்றூண்டில், நம் காலத்திலேயே உலகத்தில் பற்பல விடங்களிலும் ஜனப்புரட்சிகள்தோன்றி, ஏகாதிபத்திய ஆட்சிகளையெல்லாம் வேருடன் களைந்தெறிந்து ஜன ஆட்சியை ஸ்தாபிப்பதில் தீவிரமான போராட்டங்கள் நடந்திருக்கின்றன. போர்ச்சுகல், துருக்கி, பார்சியா, சீனா, ருஷியா, ஜெர்மனி, ஆஸ்திரியா, அயர்லாந்து, இட்டாலி, ஸ்பெயின் முதலிய சகல தேசங்களிலேயும் நம் கண் முன்னாகவே கோரமான ராஜ்யப் புரட்சிகள் தோன்றி, அந்நாடுகளின் அரசாங்க அமைப்பில் அடிப்படையான மாறுதல்களேற்பட்டிருக்கின்றன. இப்புரட்சிக ளெல்லாவற்றிலும், ருஷியாவில் உண்டானது மிகவும் கோரமானது. அது, இதுகாறும் ஆயிரக்கணக்கான வருஷங்களாக மனிதர்கள் நம்பிவந்த சகஜமான கொள்கைகளை யெல்லாம் ஒரே அடியில் உடைத்தெறிந்து விட்டு, மனித வாழ்க்கையை இது வரையில் எவரும் கண்டிராதவண்ணம் புதிய முறையிலமைத்திருக்கின்றது. சமீபத்தில் நடந்த ராஜ்யப் புரட்சிகளெல்லாவற்றிலும் ருஷியப் புரட்சியே, மிகவும் முக்கியமானது; மிகவும் ஆச்சரியமானது; மிகவும் பயங்கரமானது. இச்சிறு நூலில், ருஷியாவிலுண்டான ராஜ்யப் புரட்சியின் சரித்திரத்தைச் சுருக்கமாகக் கூறுவோம்.

## ருஷியரின் நிலைமை.

உலகத்திலுள்ள மற்ற தேசங்களுக்கும், ருஷியாவுக்கு

மிடையில் பெருத்த வித்தியாசங்களுண்டு. ருஷியாவின் அரசாட்சி ஆயிரக்கணக்கான வருஷங்களாக ஏகாதிபத்தியம். ஜார் என்னும் பட்டப் பெயரையுடைத்த அந்நாட்டு மன்னரை ஜனங்கள் இரண்டாவது தெய்வமாக நம்பிக் கொண்டாடி வந்தார்கள். ஜார் வைத்ததே சட்டம், செய்ததே திட்டம். அவர் வாக்கை மீறுவதற்கு எவருக்கும் அதிகாரமில்லை. அவரையடுத்து, அவரது பந்துக்கள் நாட்டில் உயர்ந்த பிரபுக்களாக விளங்கினார்கள். அரசாங்கத்தின் தலைமையதிகாரிகளும், பிரபுக்கள் வர்க்கத்தினரே. ஜாருக்கடுத்தபடி, அவர்கள் செய்ததே திட்டமாயிருந்தது. அவர்களைக் கேட்க ஜாரைத் தவிர வேறெவருக்கும் அதிகாரமில்லை உத்தியோகத்திலில்லாத வேறு பல பிரபுக்களும் அந்நாட்டிலிருந்தார்கள். அந்நாட்டிலிருந்த பூமியிற் பெரும்பாலும் இப்பிரபு வர்க்கத்தாருக்குள்ளாகவே பங்கிடப்பட்டிருந்தது. ஒவ்வொருவரும் லட்சக் கணக்கான ஏக்கர் நிலங்களுக்குச் சொந்தக்காரர்களாயிருந்தார்கள். இப்பிரபுக்களையடுத்து வர்த்தகஞ் செய்து வந்த தனவந்தர்கள் பலரும் அந்நாட்டிலிருந்தனர். இவர்களெல்லாருங் கூடி விஸ்தாரமான அந்நாட்டின் ஜனத் தொகையில் பத்திலொரு பங்குகூட ஆகவில்லை. மிகுதியாயிருந்த நூற்றில் தொண்ணூருக்கதிகமான பிரஜைகளின் நிலைமை மிகவும் மோசமாயிருந்தது. செழிப்பான விடங்களிலுள்ள நிலங்களில் அவர்களுக்கு உரிமையில்லை. அவர்களிற் பெரும்பாலோர் பிரபுக்களின் அடிமைகளா யிருந்து, அவர்கள் நிலங்களைப் பயிரிட்டு வந்தார்கள். அதற்குக் கூலியாக உண்ண, அற்பமான உணவும், உடுக்க கேவலமான உடையுமன்றி, அவர்களுக்கு வேறொன்றும் கிடைக்கவில்லை. ஓர் காலத்தில் நிலங்களை விற்கும்போது, அவைகளுடன் அப்பயிரிடுங் கூலிகளையுஞ் சேர்த்து விற்பது வழக்கமாயிருந்தது. அவ்வேழைப்

பிரஜைகளின் மற்றொரு பகுதியார் பட்டணங்களிற்சென்று தொழிற்சாலைகளில் கூலிவேலை செய்து பிழைத்து வந்தார்கள். அவர்களுடைய நிலைமையும் மிகவும் கேவலமாகவே யிருந்தது. இன்னொரு பகுதியார் அரசாங்கத்தின் அபரிமிதமான படைகளிற் சேர்ந்து, படைத் தொழில் புரிந்து வந்தார்கள். அவர்களுடைய நிலைமையும் கேட்கத்தரமன்று. கேவலம் உடை, உணவு, ஓர் மிக அற்பத் தொகைச் சம்பளம் இவைகளுக்காகத் தம்முயிரைக் கொடுத்து வந்த அப் படையாட்களை அதிகாரிகள் தம்மிஷ்டம்போல் சவுக்காலடிப் பதும், சுட்டு விடுவதும் சகஜமாயிருந்தது. அவ் வேழைப் பிரஜைகளின் ஓர் மிகச் சிறிய பகுதியோர் மாத்திரம், ஒன்றும் விளையாத வனாந்திரங்களில் சில ஆடுமாடுகளை வைத்துக்கொண்டு, மிருகத்திலும் கேவலமான வாழ்க்கையை ஒருவகைச் சுதந்திரத்துடன் நடத்தி வந்தார்கள்.

## மதம்.

ருஷியாவின் மதமோ முற்றிலும் ஜார் மன்னரது ஆதீனத்திலிருந்தது. அவர் அரசாங்கத்தில் தலைமை வகித்தது போல், மதத்திலும் தலைமை வகித்து வந்தார். பாதிரிகளுக்கெல்லாம் பெரியவர் ஜார்மன்னரே. இவ்வாறிருக்க, ருஷியாவின் மதாச்சாரிகளும், ஜார் மன்னரைத் தூக்கி வைத்துப் புகழ்ந்து, அவர் ஆதீனத்தை தெய்வீகமாக்கி, அதற்குப் போதுமான மத பலத்தையும் கொடுத்தார்கள். இவ்வாறு ஓர் புறம் மதத்தின் ஏகாதிபத்தியத்தாலும், மற்றொருபுறம் அரசாங்கத்தின் ஏகாதிபத்தியத்தாலும் கட்டுண்டு, ருஷியப் பிரஜைகள் சகிக்கக்கூடாத துன்பங்களை யனுபவித்து வந்தார்கள். அவர்களுள் கல்விமான்களாயிருந்த சிற் சிலர், சென்ற முன்னூறு வருஷங்களாக மேல்நாடுகளில் நிகழ்ந்து

வரும் சுதந்திரப் போராட்டத்தின் வாசனையால் தூண்டப் பட்டு, ருஷியாவின் பிரஜைகளின் நிலைமையை மேன்படுத்த ஆங்காங்கு முயற்சிக்கத் தொடங்கினர்.

## சுதந்திரக் கிளர்ச்சி.

ஆனால், மேல்நாடுகளில் தோன்றிய சுதந்திர உணர்ச்சி சிறிது சிறிதாக ருஷியாவிலும் பரவுவதைப்பார்த்து, ஜார் சக்கரவர்த்தியும், அவர் வர்க்கத்தினரும் மனதில் கிலேடைந்தார்கள். இவ்வுணர்ச்சியை எவ்வாறேனும் முளையிலேயே கிள்ளி விடுவது அவசியமென்று கருதி, அதன் ஆரம்பத்திலேயே ஜார் அரசாங்கத்தினர் அதை நசுக்கி அழிக்கும் பொருட்டு, மிகவும் கடுமையான முறைகளைக் கையாளத் தலைப்பட்டனர். ஓர் ஜனங்களுக்குள் பரவி வரும் புதிய உணர்ச்சியை எப்பேர்பட்ட மன்னாதி மன்னர்களாலும் தடுப்பதோ அல்லது அழிப்பதோ சாத்தியமில்லை யென்பது பல தேச சரித்திரங்களின் மூலமாக இப்போது நமக்கு நிதர்சனமாயிருக்கின்றது. ஆனால், அக்காலத்தில் ஜார் அரசாங்கத்தினர் இவ்வுண்மையைச் சிறிதும் அறியாமல், தம் பதவியிலும், சக்தியிலும் மமதை கொண்டு, கண்மூடித்தனமாகக் கொடுங்கோல் முறைகளைப் பின்பற்றினார்கள். இதன் பயன் என்னவாயிற்றென்றால், அதுவரையில் ஓர் சில உரிமைகளைப் பெறுவதன் பொருட்டு, பகிரங்கமாகத் தோன்றிய அற்பக்கிளர்ச்சி, தலைமீதடிபட்டுச் சிதறியது. ஆனால், அது அழிந்து விடவில்லை. நியாயமான முறைகளில் உழைத்துச் சில அற்பச் சுதந்திரங்களையடைய ஆசை கொண்டு முன் வந்த அக்கிளர்ச்சிக்காரர்கள், இப்போது பகிரங்க வேலையில் தமக்குப் பயன் கிடைக்காதென்பதை யறிந்து, மறைமுகமாக விருந்து, முன்னைக் காட்டிலும் அதிக தீவிரமாக வேலை

செய்ய முற்பட்டனர். இவ்வாறு ருஷியாவில் அந்தரங்க கிளர்ச்சி செய்யும் நிமித்தம் ரகசியச் சங்கங்கள் ஏற்படலாயின. அச்சங்கங்கள் நாட்டின் பல விடங்களிலும் தோன்றி, அரசாங்கத்தார் அறியாத வண்ணம் ரகசியமாகவே தம் வேலைகளைச் செய்யத் தொடங்கின. இவ்வாறு ருஷியாவில் உற்பத்தியான ரகசியச் சங்கங்கள் உலகப் பிரசித்தமானவை. கொடுமையான ஆட்சி புரியும் அரசாங்க அதிகாரிகளை ஆங்காங்கு கொல்வதும், அதற்குப்பதிலாக ரகசியப் புரட்சிக்காரரென்று குற்றஞ் செய்தவரும், செய்யாதவருமாகிய பல பேர்களைப் பிடித்து அரசாங்கத்தார் கொடுமையான துன்பங்களுக்குள்ளாக்குவதும் ருஷியாவில் சகஜமாகி விட்டது. புரட்சிக்காரர்களுக்கு ருஷியாவில் சிறைவாசமும், ஸைபீரியாவென்னும் வனாந்திரத்தில் வாழ்நாட்களைக் கழிப்பதும், தூக்குமேடை யேறுவதும் சகஜமாயிருந்தது அவ்வாறே அரசாங்க அதிகாரிகளுக்கும் புரட்சிக்காரர்களால் கொலையுண்டு மரிப்பதும் சகஜமாகிவிட்டது. ஜார் சக்ரவர்த்தியின் உயிரை மாய்க்கப் புரட்சிக்காரர்களால் பல தடவைகளில் முயற்சி செய்யப்பட்டது. மூன்றும் அலெக்ஜாண்டரென்ற பெயரையுடைய மன்னர் புரட்சிக்காரர் கையிலேயே உயிரிழந்தார். ருஷியாவின் புரட்சி பலிதமாவதற்குச் சுமார் நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னிருந்து அந்நாட்டில் அந்தரங்கக் கிளர்ச்சி, சில சமயங்களில் தீவிரமாகவும், மற்றுஞ் சில சமயங்களில் நிதானமாகவும் இடைவிடாமல் நடந்து கொண்டே வந்தது.

## ஐரோப்பிய மகாயுத்தம்.

இவ்வாறிருக்கையில் 1914-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் ஐரோப்பிய மகாயுத்தமாரம்பித்தது. அந்த யுத்தத்தில்

ருஷியா அரசாங்கத்தினர், இங்கிலாந்து, பிரான்சு முதலிய தேசங்களுடன் சேர்ந்து ஜெர்மனியை யெதிர்த்துச் சண்டை செய்வதாயிற்று. ஏனென்றால், அதற்கு முன்னதாகவே இங்கிலாந்து, பிரான்சு, ருஷியா இம்மூன்று ராஜ்யங்களுக்கிடையில் ஓர் சமாதான உடன்படிக்கை நிறைவேறி யிருந்தது. அதன்படி, இம்மூன்று அரசாங்கங்களில் எவரேனும் எப்போதாகிலும் ஓர் சத்துருவை யெதிர்த்துச் சண்டை செய்ய நேருமாகில், மற்ற இருவரும் ஒன்று சேர்ந்து, அச்சண்டையை நடத்த வேண்டும் என்பதேயாம். இவ்வுடன்படிக்கைக்கிணங்க, ஜார் சக்கரவர்த்தியும் ஜர்மெனியை எதிர்த்துப் போர் செய்யச் சித்தமாயினர். ஆனால், அச்சமயத்தில் அவரிடம் ஆட்கள் மாத்திரம் ஏராளமாக விருந்தனரேயன்றி, ஓர் வலிய யுத்தத்தை நடத்தப் போதுமான பணமாவது, யுத்த சாமான்களாவதில்லை. இக்காரணத்தால், யுத்தந் தொடங்கி சில காலத்திற்குள் ருஷியாவின் பலவீனம் வெளியாயிற்று. ஜெர்மானியப் படைகள் ருஷியாவின்மீது ஆக்கிரமித்து, நாளுக்கு நாள் புதிய நகரங்களையும், பிரதேசங்களையும் கைப்பற்றிக்கொண்டே வந்தார்கள். இதல்லாமலும், ஜெர்மனியுடன் போர் தொடர்ந்த காரணத்தால் ருஷியாவின் தொழிலும், வர்த்தகமும் நின்று விட்டன. ஏனென்றால், யுத்தத்திற்கு முன் ருஷியாவின் ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில் பெரும்பாலும் ஜெர்மனியுடனேயே நடந்து வந்தது. ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரர்களும் சேர்ந்து ஜெர்மனி தேசத்திற்கு எந்த வெளிநாட்டுச் சரக்கும் போகாமலும் தடைசெய்து வந்தது, ருஷியாவையும் பாதித்தது. இவ்வாறு கைத்தொழிலும் வர்த்தகமும் தடைப்பட்டதால், ருஷ்யாவில் பண நெருக்கடியும், பஞ்சமும் நேரிட்டது. யுத்த சாமான்களைச் செய்வதற்குப் போதுமான யந்திரங்களும் ருஷியாவிலில்லை. படையாட்

களையும், அவர்கள் உணவு, சண்டைக்கு வேண்டிய குண்டு, மருந்து முதலிய சாமான்களையும் கொண்டுபோய்ச் சேர்ப்ப தற்கு வேண்டிய ரயில்வண்டிகளும் போதுமான அளவு ருஷியாவிலில்லை. இக்காரணங்களால் ருஷியப் படைகள் எவ்வளவு வீரத்துடன் போர் செய்யச் சித்தமாயிருந்தும், அவர்கள் சென்ற விடங்களிலெல்லாம் ஜெர்மானியர் முன் நிற்க முடியாமல் அப ஜெயமேயடைந்து வந்தார்கள். ஓர் சமயத்தில், ருஷியப் படைகள் சுடுவதற்குப் போதுமான தோட்டாக்களில்லாமல், தம் துப்பாக்கிகளை யெறிந்துவிட்டுத் தடிகளைக் கொண்டு சண்டை செய்ய நேர்ந்தது. மற்ருேர் சமயத்தில், அவர்கள் ஜெர்மானியரது உயர்ந்த பீரங்கிகள், துப்பாக்கிகள் இவைகளுக்கு முன்னிற்க முடியாமல் புறங் காட்டி ஓடி வருகையில், அவர்கள் கையில் தடிகளுமில்லாமல், கேவலம் கற்களை யெறிந்து கொண்டே ஓடியதாகவும் தெரிகின்றது. இக்காரணங்களால் ருஷியப் படைாட்கள் எவ்வளவு வீரம் பொருந்தி யிருப்பினும், நிராயுதபாணிகளாக லக்ஷக்கணக்கில் அனுவசியமாக மடியும்படி நேர்ந்தது. அவர்கள் மனதில் அரசாங்கத்தாரின் மதியீனத்தின்மீது மிகுந்த அதிருப்தியும் ஆத்திரமும் உண்டாயிற்று. இத்துடன் நிற்கவில்லை.

## யுத்த ஏற்பாடுகள்.

ருஷியா அரசாங்கத்தார் யுத்தத்தை யொட்டி முன் ஜாக்கிரதையுடன் போதமான சாமான்களைச் சேகரித்து வைக்காத மதியீனத்தாலேற்பட்ட நஷ்டத்திற்காக மிகவும் வருந்தினர்கள். ஆனல், அவர்கள் செய்த ஒரு தவறின் பரிகாரமாக, மற்ருெரு பெருந்தவறைச் செய்ப முற்பட்டார்கள். அதாவது, யுத்த சாமான்களில்லாமல் படைக

ளழிந்து போவதைக் கண்டதும், அவர்கள் நாட்டிலுள்ள சகல பண்டங்களையும் முதலில் யுத்தத்திற்காகச் செலவிட்டு, பிறகு மிகுதியுள்ளதை மாத்திரமே மற்றவர்கள் உபயோகிக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்தார்கள். இதன் பயனாக, அந்நாட்டிலிருந்த யந்திரசாலைகளனைத்தும் யுத்தச் சாமான்களைச் செய்வதற்காக உபயோகப்படுத்தப்பட்டன. உணவுப் பொருள்களனைத்தும் முதலில் படையாட்களின் உபயோகத்திற்காகவே வினியோகஞ் செய்யப்பட்டன. ரயில் வண்டிகளனைத்தும் யுத்தத்தை யொட்டியே நடத்தப்பட்டன. இதனால் அது வரையில் நடந்துகொண்டிருந்த சொற்ப வர்த்தகமும், கைத்தொழில்களும் முற்றிலுமே நின்றுவிட்டன. உணவுப் பொருள்களின் பஞ்சமும் மேலிட்டது. ஜனங்கள் என்ன செய்வதென்று வகையறியாமல் தவித்தார்கள்.

## பஞ்சம்

இவ்வாறு, ருஷியா அரசாங்கத்தினர் நாட்டிலுள்ள உணவுப் பொருள்களையும், மற்றச் சாமான்களையும், தொழிற்சாலைகளையும் கைப்பற்றித் தம் ஆதீனத்தில் வைத்துக்கொண்டு, அவைகளைப் படையின் அவசியத்திற்காகவே உபயோகித்து வந்ததால், நாட்டில் பஞ்சமுண்டாவதற்கு இடங் கொடுத்தது. விவசாயத் தொழில் செய்து வந்த திடகாத்திரர்களா யிருந்தவர்கள் எல்லோரும் அநேகமாக ஏற்கெனவே படையிற் சேர்ந்து விட்டார்கள். ஆதலால் வேலை செய்ய ஆட்களில்லாமையால், நாட்டின் விவசாயத் தொழிலும் வெகுவாகத் தடைபட்டது. கேவலம் வயோதிகர்ளும், சில பெண்களுமே விவசாயத் தொழிலைப் பார்த்து வந்தார்கள். இதல்லாமலும், விவசாயத்தின் நிமித்தம் குடி

யானவர்கள் வைத்திருந்த குதிரைகளையும் அரசாங்கத்தார் படையின் உபயோகத்திற்காகக் கொண்டு போய் விட்டார்கள். இக்காரணங்களால் விவசாயம், தடைபட்டு, யுத்தந் தொடங்கியது முதல், நாட்டின் உணவுப் பொருள்களின் உற்பத்தியும் வெகுவாகக் குறைந்து விட்டது. இவ்வற்ப மான உற்பத்தியையும் அரசாங்கத்தார் கைப்பற்றி, படைகளின் உபயோகத்திற்காகச் செலவு செய்து விட்டதால், நாட்டில் பஞ்சம் வராமலெப்படி யிருக்கும்! தொழிற்சாலைகளில் வேலை செய்து வந்தவர்களிலும் பெரும்பாலோரான வாலிபர்கள் சண்டைக்குச் சென்று விட்டார்கள். தொழிற்சாலைகளும் சண்டையின் உபயோகத்திற்கான சாமான்களைச் செய்வதற்காகவே நடத்தப்பட்டன. இதனால் நாட்டில் ஜனங்களுக்கு அவசியமான மற்றச் சாமான்கள் உற்பத்தி யாவதும் நின்று போய்விட்டது. சண்டை தொடங்கியது முதல் வெளிநாட்டு ஏற்றுமதியும், இறக்குமதியும் முற்றிலும் நின்று விட்டனவென்று முன்னமேயே கூறியிருக்கின்றோம். இக்காரணங்களால், நாட்டில் கடுமையான பஞ்சந் தோன்றியது ஓர் ஆச்சரியமல்ல. ஆனால் ஜனங்களுடைய கஷ்டம் இத்துடன் நிற்கவில்லை.

## வர்த்தகர் கொள்ளை.

யுத்தந் தொடங்கியது எல்லோருக்கும் மிகுந்த கஷ்டங்களை விளைவித்த போதிலும், யுத்த நாடுகளிலிருந்த வர்த்தகர்களுக்கு மாத்திரம் அது மிகுந்த லாபகரமா யிருந்தது. ஏனென்றால், யுத்தத்தைச் சாக்கிட்டு, அவர்கள் நாட்டிலிருந்த அவசியமான பொருள்களை ஒளித்து வைக்கவும், சமயம்போல் ஒன்றுக்குப் பத்தாக விலையை உயர்த்தி ஏராளமான பொருள் சேகரிக்கவும் சந்தர்ப்பம் வாய்த்தது. இவ்

வரிய சந்தர்ப்பத்தை ருஷ்யாவின் வர்த்தகர்களும் சும்மா விட்டு விடவில்லை. யுத்தம் தொடங்கியதிலிருந்து அவர்கள் ஜனங்களுக்கவசியமான சகல சாமான்களையும் ஒளித்து வைத்துப் பிறகு யுத்தம் முதிர்ந்த பின், அவைகளை ஒன்றுக்குப் பத்தாக விலை வைத்து விற்கத் தலைப்பட்டனர். யுத்த காலத்தில் ருஷியா தேசத்தில் கேவலம் உப்பு முதலிய உணவுக்கவசியமான சாமான்களும், ஊசி, நூல், ஆணி, குதிரை லாடம் முதலிய அற்ப சாமான்களும்கூட விலையில் ஏராளமாக ஏறிவிட்டன. துணி, சாராயம், சோப்பு, வாசனைத் திரவியங்கள் முதலிய சாமான்களோ ஒன்றுக்கு நூறு வீதம் விலையேறி விட்டன. அக்காலத்தில் சிறிய வர்த்தகர்கள் ஆணி, ஊசி, குதிரை லாடம் முதலிய அர்பச் சாமான்களை வெளி தேசங்களிலிருந்து ரகசியமாகக் கைப் பெட்டிகளில் கொண்டு வந்து விற்றதினாலேயே லக்ஷக்கணக்கான பொருள் சேகரித்ததாகத் தெரிகின்றது. இவ்வாறான நிலைமையில் ஜனங்களுக்குள் அரசாங்கத்தினர்மீது ஆழ்ந்த அதிருப்தியுண்டாவது ஆச்சரியமில்லை.

ஜனங்களின் உணவுப் பஞ்சத்தை ஒருவாறு நிவர்த்திக்கும் பொருட்டு அரசாங்கத்தினர் பீட்ரோகிராட் முதலிய நகரங்களில் ஏழைகளுக்கு இலவசமாக உணவு கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார்கள். அரசாங்கத்தினர் கையிற் சேகரித்து வைத்திருந்த தானியங்களின் ஓர் பகுதியை அந்நகரிலுள்ள ரொட்டிக் கடைக்காரர்களிடம் கொடுத்து, அவர்கள் மூலமாக ஏழைகளுக்கு உணவு கொடுத்துதவுவது வழக்கமாயிருந்தது. எனினும், ஜனங்களுக்குள் உண்டாயிருந்த அதிருப்தியும் ஆத்திரமும் சிறிதும் தணிந்தபாடில்லை. ஆனால், அரசாங்கத்தினருடைய ஜனங்களுடைய ஆத்திரத்தின்

அளவை அறியாமலிருக்கவில்லை. வெகு சீக்கிரத்தில் ஜனங்கள் ஒன்றுசேர்ந்து கிளம்பி, அரசாங்கத்தை யெதிர்த்துக் கலகஞ் செய்வார்கள் என்பதை ஜார் அரசாங்கத்தார் நன்றுயறிந்திருந்தார்கள்.

## சண்டையில் தோல்வி.

நாட்டின் நிலைமை இவ்வாறிருக்க, படையின் நிலைமையைப்பற்றி சிறிது கவனிப்போம். அரசாங்கத்தார் நாட்டின் உணவுப் பொருள்களையும், தொழிற்சாலைகளையும் கைப்பற்றி படைகளின் அவசியத்தைப் பூர்த்தி செய்ய தொடங்கியது முதல், சிறிது காலம் ருஷ்யப் படைகள் சண்டையில் வெற்றி யடைந்து வந்தன. ஆனால், அவ்வெற்றி வெகு காலம் அவ்வாறே நடக்கவில்லை. ருஷியப் படைகளுக்கு வேண்டிய உணவு, உடை, குண்டு, மருந்து முதலிய சாமான்களை எவ்விதக் குறைவுமில்லாமல், அரசாங்கத்தினர் கொடுத்துவந்த போதிலும், அவர்கள் எவ்வித நிரந்தரமான வெற்றியையும் அடைவதற்கு இடமில்லாமலிருந்தது. இதன் காரணம் பலவாறாகச் சொல்லப்படுகின்றது. ருஷ்யாப் படை அதிகாரிகளிற் சிலர் ஜெர்மெனியிடமிருந்து லஞ்சம் பெற்றுக்கொண்டு, வேண்டுமென்றே ருஷியப் படைகள் தோல்வி யடையும்படிச் செய்து வந்ததாகவும் சொல்லுகின்றார்கள். இதன் உண்மை எவ்வாறிருப்பினும், ருஷியப் படைகள் ஒன்றன்பின்றொன்றாக மிகவும் கேவலமான தோல்வியையே யடைந்து வந்தார்கள் என்பதிற் சந்தேகமில்லை. இக்காரணத்தால் ருஷியப் படைகளின் மனதிலும் மிகுந்த அதிருப்தியும், ஆத்திரமும் உண்டாகத் தொடங்கியது. தாம் எத்தனை வீரத்துடன் போர் புரிந்தும், இவ்வாறு அடுத்தடுத்து தோல்வியடைவதின் காரணம் படையதிகாரிகளின் மதியீன

மும், துரோகத்தனமுமே என்று அவர்கள் அபிப்பிராயங் கொண்டார்கள். வீணாக, இவ்வாறு மடிவதில் என்ன பயன்? இதைவிடப் படையை விட்டோடிப்போவது மேல் என்று கருதி, அநேகர் யுத்த களத்தை விட்டு ஓடிப்போகத் தலைப்பட்டனர். ருஷியா அரசாங்கத்தினர் யுத்தத்தின் நிமித் தம் திரட்டி, படைமுகத்தில் நிறுத்தியிருந்த சுமார் இரண்டு கோடி ஆட்களில், இருபது லக்ஷத்திற்கதிகம் பேர்கள் இவ் வாறு எவருக்குஞ் சொல்லாமல் படை முனையை விட்டோ டிப் போனதாகத் தெரிகின்றது. இது அவர்கள் மொத்தப் படையின் தொகையில் பத்திலொரு பங்காகின்றதல்லவா? இவ்வாறு ஓடிப்போனவர்களைத் திரும்பிப் பிடித்து வரும் பொருட்டு, படையதிகாரிகள் என்ன ஏற்பாடு செய்தும், பூர்த்தியாக பயன் தரவில்லை. ருஷிய அதிகாரிகள் தம்படை யாட்களின் இத்தகைய மனோ நிலைமையைக் கண்டதும், தம்மனதில் திகிலடைந்தார்கள். படையாட்களுக்குள்ளும் சீக்கிரத்தில் ஓர் புரட்சி உண்டாகக் கூடுமென்று அவர்கள் மிகவும் பயந்தார்கள். இச்சந்தர்ப்பத்தில் என்ன செய் வது?

## தோல்வியின் பயன்.

ருஷிய அரசாங்கத்தார் ஆதியில் இந்த யுத்தத்தில் கலந் தகன் காரணங்களில் முக்கியமான தொன்று தம் நாட்டில் தோன்றுவதாயிருந்த ராஜீயப் புரட்சியைத் தடுப்பதாகும். யுத்தந் தொடங்குவதற்கு முன்னரே, ருஷ்யாவில் பயங்கர மான ராஜீயப் புரட்சி உண்டாவதற்கு வேண்டிய அடையா ளங்கள் அனைத்தும் காணப்பட்டன. அச்சமயத்தில் ருஷ்ய அரசாங்கத்தார் ஓர் மகத்தான யுத்தத்திற் கலந்து, வெற்றி யடைந்து விட்டால், உலகத்தார் முன்னிலும், தம் நாட்டி

னர் முன்னிலும், சக்தியும் சௌரவமும் வாய்ந்தவர்களாகி ராஜ்யப் புரட்சியை என்றும் தலையெடுக்காத வண்ணம் அடியோடு அழித்துவிட வேண்டுமென்று நம்பியிருந்தார்கள். அவ்வாறிருக்கையில், யுத்தந் தொடங்கிய சில காலத்திற்குள்ளேயே அவர்கள் நம்பியிருந்த ஆசைக் கனவுகளெல்லாம் வீணாகி விட்டன. யுத்தத்தில் சிறிதாவது வெற்றியடைந்தபாடில்லை. இனி ஜெர்மெனியை யெதிர்த்து வெற்றியடைவோம் என்ற நம்பிக்கையும் சிறிதுமில்லை. இச் சந்தர்ப்பத்தில், ஜெர்மெனியுடன் சமாதானம் செய்து கொள்வதே மேலானது. ஆனால், இத்தனை ஆர்ப்பாட்டத்துடன் தொடங்கிய யுத்தத்தில் தோல்வியடைந்து கேவலமாக வெட்கங்கெட்ட விதத்தில் சமாதானம் செய்து கொள்வதால், இதர தேசத்தினர் மனதில் ருஷ்யாவின் மதிப்பு எவ்வளவு குறைந்த போதிலும், ருஷ்யாவின் பிரஜைகளது கண்முன் அவர்களுடைய மதிப்பு இன்னும அதிகமாகக் குறைந்துவிடுமல்லவா? அவ்வாறுபின் புரட்சிக்காரர்களின் கை இன்னும் வலுத்துவிடுமல்லவா? ஜனங்கள் மனதில் அரசாங்கத்தாருக்கு விரோதமாக உண்டாயிருக்கும் அதிருப்தியையும், ஆத்திரத்தையும், மதிப்புக் குறைவையும, ஆதாரமாக வைத்துக்கொண்டு, புரட்சிக்காரர்கள் முன்னைக் காட்டிலும் தீவிரமாகப் பிரசாரஞ் செய்ய மாட்டார்களா ? அதனால் பொது ஜனங்களிற் பெரும்பாலோரும் புரட்சிக்காரருடன் சேர்ந்து அவர்கள் பலம் அதிகரித்து விடுமல்லவா ? இவ்வாறு பல யோசனைகளுக்குள்ளாகி, ருஷ்ய அரசாங்கத்தார் முதலில் தம் நாட்டினுள் தோன்றவிருக்கும் புரட்சியை அடியோடு நசுக்கி விட்டுப் பிறகு கூடுமானால், யுத்தத்தை நடத்துவதென்றும், இல்லாவிட்டால் சமாதானஞ் செய்து கொள்வதென்றும் தீர்மானித்தார்கள்.

# சோவியத் ருஷியா

## இரண்டாம் அத்தியாயம்

### புரட்சிக்குத் தூண்டுதல்

ருஷிய அரசாங்கத்தார் சண்டை ஆரம்பித்த சிலகாலத்திற்குப்பின், பல தோல்விகளடைந்து மிகவும் மெலிந்திருந்த சமயத்தில், தம் நாட்டில் தோன்றவிருந்த ராஜ்யப் புரட்சியை முதலில் அழித்துவிட்டுப் பிறகு, வேண்டுமானல் ஜெர்மெனியுடன் சமாதானம் செய்துகொள்ளவோ, அல்லது, கூடுமானல் யுத்தத்தை மேல் நடத்தவோ தீர்மானித்தார்களென்று முன் கூறினேம். ஆனல், ருஷியாவில் புரட்சிக்காரர்கள் சீக்கிரத்தில் புரட்சி ஆரம்பிப்பார்களென்று தோன்றினதே ஒழிய, அவர்கள் அச்சமயத்தில் ஆரம்பிக்கவில்லை. ஆரம்பிக்காத புரட்சியை அடக்குவதெப்படி ? இது நமக்கு ஓர் ஆச்சரியமாகத் தோன்றலாம். ஆனல், ருஷிய அரசாங்கத்தாருக்கு இது ஓர் சகஜமான வேலை. அவர்கள், முன் எத்தனையோ தடவைகளில், ஆரம்பிக்காத புரட்சியைத் தாமே தூண்டிவிட்டு ஆரம்பிக்கச் செய்து, பிறகு, அதைக் கடுமையான முறைகளால் அழித்திருக்கின்றார்கள். இப்போதும் அவர்கள் அவ்வாறே செய்ய முற்பட்டனர்.

முதலில் பீட்ரோகிராட் என்னும் ராஜதானி நகரில் அரசாங்கத்தார் ஏழைகளுக்குக் கொடுத்துதவி வந்த உணவை நிறுத்தினர்கள். அந்நகரில் கலகத்தை உண்டு பண்ண

இந்த ஒரு காரணமே போதுமானது. ஆனால், ருஷிய சர்க்கார் இத்துடன் நிற்கவில்லை. ராஜதானி நகரத்தில் எவ்விதப் பொதுக்கூட்டமும் கூடப்படாதென்றும், அவ்வாறு கூடுமாகில், அவை பலவந்தமாகக் கலைக்கப் படுமென்றும், பகிரங்க அறிக்கை யிட்டார்கள். எவ்விதப் பொதுக்கூட்டமும் நடைபெறுதிருந்த அந்நகரில், இத்தகைய சர்க்கார் அறிக்கைக்குக் காரணமேயில்லை. ஆனால், ஜனங்கள் உணவுப் பஞ்சத்தால் தூண்டப்பட்டு, அவ்வறிக்கையை மீறிக் கூட்டங் கூட வேண்டுமென்பதே சர்க்காரது விருப்பம். அவ்வாறு கூடுவார்களே யானல், அவர்களைப் படைபலத்தைக்கொண்டு எளிதில் அழித்துவிட்டு, அவ்வாறே மற்ற நகரங்களிலும் செய்து, புரட்சிக்காரர்களைத் தலையெடுக்க விடாமல் அடியோடு அழித்துவிடும் சந்தர்ப்பம் வாய்க்குமென்று சர்க்கார் நம்பியிருந்தார்கள். பெட்ரோகிராட் நகரத்தின் வீதிகளில் பற்பல விடங்களிலும் அவர்கள் மெஷின்கன், பீரங்கி முதலியவைகளை யமைத்து, எளிதில் கூட்டங்கூடும் ஜனங்களைச் சுட்டுக் கொல்லும் விதத்தில் ஏற்பாடுகளும் செய்திருந்தார்கள்.

## பசித்தோர் ஊர்வலம்.

அவர்கள் எதிர்பார்த்த வண்ணமே பீட்ரோகிராட் வாசிகளான ஏழை ஜனங்கள் பசிப்பிணியால் தூண்டப்பட்டு, சர்க்காரைத் தமக்கு உணவு கொடுக்கும்படி வேண்டி யெழுதியிருந்த கொடிகளைப் பிடித்துக்கொண்டு, கூட்டங்கூட்டமாக நகர ஊர்வலம் வர ஆரம்பித்தார்கள். சர்க்கார் அவர்களை, அரசாங்கத்தைக் கவிழ்க்கக் கிளம்பியிருக்கும் புரட்சிக்காரர்களென்று கூறி, எதிர்த்துத் தாக்கும்படி, பீட்ரோகிராட் நகரக் காவற்படைகளை ஏவினர்கள். இதுவரைக்கும் சர்க்கார் நினைத்தபடியே நடந்தது. ஆனால், இதற்குமேல்

அவர்கள் போட்ட கணக்குகளெல்லாம் தப்பாகிவிட்டன. அவர்கள் எதிர்பார்த்திருந்தபடி நகரப்படைகள் ஜனக் கூட்டங்களை எதிர்த்துத் தாக்கவில்லை அவர்களுக்கும் அரசாங்கத்தார் மீது எத்தனையோ குறைகளும், அதிருப்தியுமிருந்தன. அவர்களும் தம் குறைகளைத் தீர்த்துக்கொள்ள இதுவே தருணமெனக் கருதி, பொது ஜனங்களுடன் கலந்து கொண்டார்கள். இப்போது அரசாங்கத்தார் கை தாழ்ந்து போயிற்று. படைகள் எத்தனை காலம் வரைக்கும், தம்மைப் பொது ஜனங்களுக்கு வேறானவர்களாகக் கருதி, சர்க்கார் இடும் கட்டளைகளைக் கண்மூடித்தனமாக நிறைவேற்றி வருவார்களோ, அத்தனை காலம் வரைக்கும், சர்க்கார் தம்மிஷ்டப்படி அரசாட்சியை நடத்துவது சாத்தியமாகும். ஆனால், எப்போது படைகள் தம் நிலைமையைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கி, தாமும் பொது ஜனங்களும் ஒன்றென்பதை உணருவார்களோ, அப்போதிலிருந்து அரசாங்கத்தார் ஜனங்களது இஷ்டத்தை மீறி எக்காரியமும் செய்ய இயலாது. இவ்வாறிக்கையில், படைகள் ஜனங்களுடன் சேர்ந்து கொண்டபின், அரசாங்கத்தார் தம் கை வலுவை முற்றிலுமிழந்தார்கள். இப்போது அவர்கள் வெறும் ஆட்களானார்கள். நகரப்படைகள் ஜனங்களுடன் கலந்து கொண்டபோதிலும், யுத்தமுனையிலிருந்து வேறு நம்பிக்கையான படைகளைத் தருவித்து, கலகத்தை எளிதில் அடக்கிவிடலாமென்று அரசாங்கத்தார் சிறிதுநேரம் தைரியங் கொண்டார்கள். ஆனால், யுத்த முனையிலிருந்த படைகளும் சர்க்கார் சொற்படி, தம்மினத்தாராகிய பொது ஜனங்களை எதிர்த்துத் தாக்கத் தயாராயிருப்பதாகக் காணவில்லை. அங்கிருந்து அவசரமாகத் தந்திச் செய்தியின்மீது அனுப்பப்பட்ட இரண்டு டிவிஷன் படைகளை வழியிலேயே ரெயில்வே தொழிலாளர் கொண்டுவர மறந்து விட்டதினால், அவர்களும் ராஜதானி

நகர்வந்து சேரக் கூடவில்லை. பீட்ரோகிராடிலிருந்த அரசாங்க அதிகாரிகளின் நிலைமை மிகவும் அபாயகரமாயிருந்தது.

## தலைவர் யார்.

மேற்கூறிய புரட்சி பீட்ரோகிராட் நகரத்தில் ஆரம்பித்தபோது, அதை நடத்த ஜனத்தலைவர்கள் எவருமில்லை. ஜனங்களுக்குள்ளும் ஒற்றுமைப் பான்மையுடைய எவ்வித சங்கமுமில்லை. எவரும் இப்புரட்சி இவ்வாறு ஆரம்பிக்குமென்று எதிர்பார்க்கவில்லை. பட்டினியாயிருந்த ஏழை ஜனங்களும் அவர்களுடன் கலந்துகொண்ட நகரக் காவற்படைகளும், திடீரென்று தாம் எவ்வித நிர்ப்பந்தமும் இல்லாமல் சுதந்திரமாயிருப்பதைக் கண்டு கொண்டார்கள். இச்சுதந்திரவுணர்ச்சி அவர்கள் அனுபவத்தில் முற்றிலும் புதியதாகும். இப்போது அவர்கள் இன்னதுதான் செய்வதென்றறியாமல் திகைத்து நின்றார்கள். தம்மீது எவர் தலைமைப்பதவியை வகித்து, தம் குறைகளை யெல்லாம் தீர்க்கும் புதிய அரசியல் திட்டத்தை அமைப்பார்களென்று அவர்கள் அங்கு மிங்கும் நோக்கினார்கள். சாமான்னிய ஜனக்களுக்குத் தாமே எக்காரியத்தையும் செய்து வழக்கமில்லை. ஆயிரக்கணக்கான வருஷங்களாக அவர்கள் பிறர் அதிகாரத்தைத் தாங்கி, பிறரிடம் கட்டளைப்படி நடப்பதே வழக்கமாயிருந்தது. இப்போதும் அவர்கள் தாமாகவே எக்காரியத்தையுஞ் செய்யத் துணியவில்லை. அவ்வாறு செய்யத் திறமையும் அவர்களிடமில்லை. அவர்கள் தம்மீது தலைவர்கள் வேண்டுமென்று அங்கு மிங்கும் நோக்கியதில், அவர்கள் கண்முன் 'டூமா' வென்ற ருஷிய ஜனச்சபை தென்பட்டது. அவர்கள் நேராக டூமாவிற்குச் சென்றார்கள்.

## டூமா சபை.

டூமா வென்பது, இதற்குமுன் ஜார் சக்கிரவர்த்தி ஏற்படுத்தியிருந்த ஜனச்சபையாகும். அதின் அங்கத்தினர்கள் பெரும்பாலும் ஜார் சக்கிரவர்த்தியின் ஆட்சியை ஆதரிப்பவர்களே யாவர். அவ்வாறில்லாவிடில், அவர்களுக்கு அச்சபையில் இடங்கிடைத்திராது. டூமாவின் அங்கத்தினர்கள் ருஷியாவிலுள்ள ராஜீயக் கொள்கைக்காரர் சகலர்களிலும் தாழ்மையான மிதவாதிகள். இப்போது பொது ஜனக்கூட்டம் தம்மை நோக்கிவந்து, புரட்சியின் தலைமை வகிக்கும்படிக் கேட்டபோது, அவர்களும் திகைத்து விட்டார்கள். ஜார் அரசாங்கத்தை அழித்து விடவாவது, அல்லது புதியதோர் புரட்சி அரசாங்கத்தை ஸ்தாபித்து விடவாவது அவர்கள் மனதில் சிறிதும் எண்ணமேயில்லை. இப்புரட்சியின் பயனாக, ஜார் மன்னரிடமிருந்து எதாவது சில சீர்திருத்தங்களைப் பெற்று ஜனங்களுக்களித்து, அவர்களைத் திருப்தி செய்து விடலாமென்று, டூமாவின் அங்கத்தினர்கள் எண்ணினார்கள். இந்நோக்கத்தை மேற்கொண்டு. அவர்கள் ஜார் சக்கிரவர்த்தியை ஜனவுரிமையை ஒட்டிய சில சீர்திருத்தங்களை அளிக்க வேண்டுமென்று மன்றாடினார்கள். ஆனால், ஜார் மன்னர், இன்னும் யுத்தத்தின் முனையிலிருந்த அபரிமிதமான படைகளில் பெரும்பாலோர் தன் கட்டளைப்படி நடப்பார்களென்று நம்பி யிருந்ததால், அவர் இந்நிலைமையில் ஜனங்களுக்கு எவ்வித வுரிமைகளையும் அளிக்க வில்லை. ஆனால், ஜனங்களுக்குள் தோன்றியிருந்த அதிருப்தியும், ஆத்திரமும், படைகளுக்குள்ளும் பூரணமாகக் குடிகொண்டிருக்கின்றன வென்பதையும், இச்சமயத்தில் படைகள் தன்னுதவிக்கு வரமாட்டார்கள் என்பதையும் அவர் சீக்கிரத்தில் கண்டு கொண்டார். ஆனால் அச்சமயத்தில் அவர்

எத்தனை உரிமைகளை ஜனங்களுக்களித்த போதிலும், அவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக விருக்கவில்லை. ஏனென்றால் அதன் காலம் மிஞ்சிப் போய்விட்டது.

### புதிய அரசாங்கம்.

இப்போது டூமா அங்கத்தினர் தாமாகவே அரசாங்க அதிகாரத்தை மேற்கொள்ளும்படி நேரிட்டது. ஆனால்,புரட்சியை ஆரம்பித்த பொது ஜனங்களின் அபிப்பிராயங்களுக்கிணங்கியே அவர்கள் எக்காரியங்களையும் செய்ய வேண்டியிருந்தது. பீட்ரோகிராட் நகரத்தில் படைகள் தமக்கான ஒரு கமிட்டியையும், தொழிலாளர் தமக்கான வேறு கமிட்டிகளையும் ஏற்படுத்திக் கொண்டனர். இவ்வாறே, பீட்ரோகிராட் நகரத்தில் நிகழ்ந்த சப்பவங்களின் செய்தி வெளியூர்களில் பரவியதும் ஆங்காங்கு தொழிலாளர் கமிட்டிகளும் படையாளர் கமிட்டிகளும் உடனேஸ்தாபிதமாயின. அவர்களெல்லோரும் தத்தம் பிரதிநிதிகளை பீட்ரோகிராட் நகரத்தில் கூடி, புதிய அரசியல் திட்டத்தை உண்டாக்கும் பொருட்டு அனுப்பினர்கள். இப்பிரதிநிதிகள் அனைவரும் வந்து கூடிய சபையை முதலாவது 'சோவியத்' மகா நாடொன்றழைப்பார்கள்.

ஜார் அரசாங்கம் திடீரென்று எவ்வித பலாத்காரமுமின்றி, தானகவே குலைந்து விழுந்தது. அதற்குப் பதிலாக வேறொரு அரசாங்கத்தைத் திட்டஞ் செய்வதன் பொருட்டு தொழிலாளரும், படையாளரும் சோவியத் மகாநாட்டில் கூடியது போல, வர்த்தகர், நிலச்சுவாந்தார் முதலிய முதலாளிகளும் தத்தம் அபிப்பிராயங்களைத் தெரிவித்து, உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டுக் கூட்டங் கூடினர். இவ்வாறு நாட்டிலுள்ள எல்லா வகுப்பாரும் பீட்ரோகிராட நகரத்தில் கூடி, புதிய அரசியலை திட்டஞ்செய்யத் தொடங்கினர்கள். சிக்கிரத்தில் ஸ்திரமான அரசாட்சியை ஸ்தாபிக்கும்பொருட்டு, ருஷியா முழுவதிலும் ஒரு பொதுத் தேர்தல் நடைபெற வேண்டுமென்றும், அதுவரைக்கும் அரசாட்சியை நடத்திவருவதற்காக தற்காலிகமான ஒரு அரசாங்கக்கமிட்டியை நியமிக்கவேண்டுமென்றும் தீர்மானமாயிற்று.

இவ்வாறு புதியதாக நியமிக்கப்பட்ட அரசாங்கக் கமிட்டியில் சேர்ந்திருந்த அங்கத்தினரெல்லோரும் முதலாளி வர்க்கத்தினரே. தொழிற்கட்சியைச் சேர்ந்திருந்த கிரன்ஸ்கி என்ற தலைவர் மாத்திரம், அக்கமிட்டியின் ஓர் அங்கத்தினராக நியமிக்கப் பட்டிருந்தார். ஜார் அரசரின் பழைய உத்தியோகஸ்தர்கள் முன்போலவே தத்தம் உத்தியோகங்களைப் பார்த்து வந்தார்கள். படை யதிகாரிகளும் முன்னவர்களே தம் பதவியிலிருந்தார்கள். படை யமைப்பில் எவ்வித மாறுபாடும் ஏற்படவில்லை. ஆனால், புதியதாக ஏற்படுத்தப்பட்ட படையாளர் சங்கங்கள், முன்போல், தாம் இழிவான பதவியில் இருக்கத் தயாராயில்லை யென்றும், தாம் அங்கீகரிக்காத படை யதிகாரிகளின் கீழ் சேவகஞ்செய்ய முடியாதென்றும் ஓர் பிரேரணை கொண்டுவந்தார்கள். அப்பிரேரணை அவ்வாறே புதிய அரசாங்கக் கமிட்டியாரால் அங்கீகரிக்கப் பட்டது. தொழிலாளர் சங்கத்தாரும் தமக்குச் சாதகமான சில பிரேரணைகளைக் கொண்டு வந்தார்கள். அவைகளும் அங்கீகரிக்கப்பட்டன. இவ்வாறு புதிய அரசாங்கக் கமிட்டி நிலைபெற்றது.

## ஜார் இறக்கம்.

இதன் பிறகு, ஜார் சக்ரவர்த்தியின் ஆட்சி அவசியமில்லை. புரட்சியில் பணக்காரர்களுங் கூடக்கலந்து, தமக்குச் சாதகமான சகல விஷயங்களையும் தாமே எளிதில் நிறைவேற்றிக் கொள்ளலாமென்ற நம்பிக்கை கொண்டதினால், அவர்களும் ஜார் சக்ரவர்த்தியின் ஆட்சியை அழித்துவிடவே முயன்றார்கள். ஏனென்றால், ஜாரின் ஆட்சி தொலைந்துபோகுமானால், நாட்டின் சகல அதிகாரங்களையும் அவருக்கடுத்தபடியாகத் தாமே அநுபவிக்கலாமென்று இவர்கள் நம்பியிருந்தார்கள். ஜார் சக்ரவர்த்தி தம்பதவியை விட்டுக் கொடுத்து விட வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. வேறு வகை யில்லாமல், அதற்கிணங்கி, சக்ரவர்த்தியும் தப்பதவியை விட்டுக்கொடுத்து விட்டார். அவரைத்தகுந்த பந்தோபஸ்தில் வைத்தார்கள்.

## தொழிலாளர் நிலைமை.

இப்புதிய அரசாங்கக் கமிட்டி ஏற்பட்டு சில காலத்திற்குள் இதன் நடவடிக்கைகள் பொது ஜனங்களின் விருப்பத்திற்கிணங்கி யிருப்பதாகக் காணப்படவில்லை. முக்கியமாகத் தொழிலாளர் சங்கங்களும், படை யாளர் சங்கங்களும் இவ்வரசாங்கத்தின் மீது அதிருப்தி கொண்டன, பழைய அரசாட்சி அழிந்து, புதியது ஏற்பட்ட பின்னும், தம் நிலைமை எவ்விதத்திலும் மேன்மை யடையவில்லை யென்று தொழிலாளர் கருதினர்கள். முன்போலவே அகவிலைகள் அதிகமாயிருந்தன. வர்த்தகர்கள் ஒன்றுக்கு நூருக லாபம் வைத்து, ஏராளமான தனத்தைச் சேகரித்து வந்தார்கள். பணக்காரர்கள் முன்போலவே இன்னும் அதிகப் பணக்காரர்களாகி வந்தார்கள். தொழிலாளரும் இன்னும் முன்போலவே தரித்திர நிலைமையிலிருந்து வந்தார்கள். அரசாங்க மாற்றத்தால் தாம் எவ்விதப் பயனையும் அடையவில்லை யென்று கருதி, அவர்கள்மனதில் மிகுந்த அதிருப்தி கொண்டிருந்தார்கள். ஆயினும், அவர்கள் தம் சங்கங்களை பலப்படுத்திக் கொண்டே வந்தார்கள்.

## யுத்தம் வேண்டாம்.

படையாளரும் இவ்வாறே அதிருப்தி கொண்டார்கள். அவர்களுக்கு யுத்தத்தில் சிறிதும் மனமில்லை. யுத்தம் நின்று, அவர்கள் தப் தம் வீடுபோய்ச் சேரவேண்டு மென்று ஆவல் கொண்டிருந்தார்கள். ஜார்மன்னர் போனபின், யுத்தம் எதற்காக? நமக்குப் பிறரது ராஜ்யங்கள் தேவையில்லை. எல்லோரும் அவர்களது நாடுகளில் சுதந்திரமாக வாழட்டும், நாம் நம்நாட்டில் உள்ளதை வைத்துக்கொண்டு வாழ்வோம்," என்றிவ்வாறு சிந்தித்து, அவர்கள் யுத்தத்தை மேல் நடத்துவதில் சிறிதும் மனமில்லா திருந்தார்கள். ஆனல், இப்போதும் அதிகாரப் பதவியை வகித்து வந்த ஜாரின் பழைய அதிகாரிகளும், வர்த்தகர்களும், மற்றப் பணக்காரர்களும் யுத்தத்தை நடத்தியே தீரவேண்டு மென்று வற்புறுத்தினர்கள். ஏனென்றல், ஜார்மன்னர் நினைத்தது போலவே யுத்தத்தை நடத்தி வெற்றி பெருவதனல், புதிய ராச்சியங்கள் கிடைக்கு

மென்றும், புதிய வர்த்தகஞ் செய்யவும், தொழிற்சாலைகள் ஸ்தாபிக்கவும் இடமுண்டாகுமென்றும், யுத்தம் நடக்குமளவும், அகவிலைகள் ஏறியிருப்பதால் அதன் மூலமாகத் தாம் ஏராளமான லாபத்தை யடைந்து, தனஞ் சேகரித்துவிடலா மென்றும் அவர்கள் எண்ணினார்கள். இத்துடன் நில்லாமல், யுத்தத்தில் ருஷியாவின் கூட்டாளிகளா யிருந்த இங்கிலாந்தும், பிரான்சும், முன் ஜார் சக்கிரவர்த்தி செய்திருந்த ஒப்பந்தத்தின்படி, ருஷியர்கள் யுத்தத்தை முடிவு வரையில் நடத்தியே தீரவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ருஷியர்கள் யுத்தத்தை மேல்நடத்துவார்களானால், அவர்களுக்கு வேண்டிய சகல உதவிகளும் தாம் செய்வதாகவும் கூறினார்கள் புதிய அரசாங்கக் கமிட்டியார் இதற்கிணங்கி, யுத்தத்தை நடத்தவே விரும்பினார்கள். ஆனால் படைகள் அதற்குச் சம்மதிக்கவில்லை. அவர்களை எவர் யுத்தத்தை நடத்தும்படி தூண்டுவது ?

## கிரன்ஸ்கியின் முயற்சி.

புதிய அரசாங்கக் கமிட்டியில் யுத்த இலாகா மந்திரிப் பதவியை வகித்த கிரன்ஸ்கி என்பவர், தொழிலாளர் கட்சியைச் சேர்ந்த தலைவர். அவர் சிறிதும் சுயநலம் பாராது உழைப்பவர். அவர்மீது தொழிலாளரும், படையாளரும் ஒருங்கே அன்பு கொண்டிருந்தார்கள். அவர் சென்று படைகளை யுத்தஞ் செய்யும்படித் தூண்டும் பட்சத்தில், அவர்கள் அதற்கிணங்குவார்களென்பதிற் சந்தேகமில்லை. இப்போது புதிய அரசாங்கத்தின் மற்ற அங்கத்தினரும், பீட்ரோகிராட் நகரத்திலிருந்த இங்கிலாந்து, பிரான்சு முதலிய சிநேக ராஜ்யங்களின் பிரதிநிதிகளும் ஒன்றுசேர்ந்து, கிரன்ஸ்கியை பின்னும் யுத்தந்தொடங்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி வற்புறுத்தினார்கள். இவ்விஷயத்தில் கிரன்ஸ்கியின் சொந்த அபிப்பிராயமும் அதற்கிணக்கமாகவே யிருந்ததாகத் தெரிகின்றது. ஏனென்றால், யுத்தத்தை மேல்நடத்தி, ஜெர்மெனியன் படைபலத்தை அழிக்காவிடில், அது சீக்கிரத்தில் ருஷியாவின்மீது ஆக்கரமித்து, ருஷியா நாட்டை ஆதீனப்படுத்தி விடுமென்று அவர் நினைத்தார். அத்துடன்

ருஷியாவில் புதியதாகத் தோன்றியிருக்கும் ஜன சுதந்திர உணர்ச்சியும், அரசாங்கமும் அழிந்தே போய்விடும். இவ்வாறு கருதி, கிரான்ஸ்கி படைமுனையிற்சென்று, படையாட்களைப் பின்னும் யுத்தந்தொடங்கி நடத்தும்படி வேண்டினர். ஆனல் அவர்களிற் பெரும்பாலோர் ஒரு அடிகூட எடுத்து வைப்பதற்குத் தயாராயில்லை. "நாங்கள் ஜெர்மெனியையாவது வேறெந்த நாட்டையாவது அனுவசியமாக எதிர்க்கமாட்டோம். யுத்தத்தின் காரணம் ஜார் மன்னரால் ஆரம்பிக்கப்பட்டது அது அம்மன்னரோடே போய்விட்டது. இப்போது ஜெர்மெனியின் மீதாவது, அல்லது ஆஸ்டிரியாவின் மீதாவது எங்களுக்கு எத்தகைய விரோதமுமில்லை. அவர்கள் படையெடுத்து வாராவண்ணம், அவர்கள் நாட்டுப்பொது ஜனங்களையும் படையாட்களையும் நாங்கள் வேண்டிக்கொள்வோம்" என்று அவர்கள் பதில் கூறிவிட்டார்கள்.

## பின்னும் யுத்தம்.

ஆகஸ்டு மாதம் 5ந் தேதி மறுபடியும் பல கட்சிகாரும் அடங்கிய ஓர் கூட்டங் கூடியது. யுத்தத்தை நடத்துவதா, இல்லையா என்ற கேள்வியே இப்போது பிரதானமாயிருந்தது. அக் கூட்டத்தினிடையில் பல கட்சியாரும் தத்தம் அபிப்பிராயங்களைத் தெரிவித்தார்கள். அபிப்பிராய பேதங்களின் காரணமாக கூட்டத்தில் சண்டை, சச்சரவுகளும் நடந்தன. பழைய அரசாங்க அங்கத்தினரில் பெரும்பாலோர் தம்பதவிகளை ராஜிநாமாக் கொடுத்து விலகிக் கொண்டனர். அக்கூட்டத்தில் ஒன்றும் நிச்சயமாக முடிவு பெறவில்லை.

## கட்சிச் சண்டை.

இதன் பின், ருஷியாவில் கட்சிபேதங்களும், கட்சிச் சண்டைகளும் வலுத்தன தொழிலாளர் சங்கங்களும், படையாட்கள் சங்கங்களும் ஒரே அபிப்பிராயங் கொண்டு ஒன்று சேர்ந்திருந்தன- ஆனல், மற்றக் கட்சியார் அனைவரும் வெவ்வேறாகப் பிரிந்து, தந்தம் கொள்கைகளை வற்புறுத்தினர்கள். 1917ம்- வருஷம் ஆகஸ்டு மாதம் 25ந் தேதி, மாஸ்கோ

நகரத்தில் சர்வகட்சி மகாநாடு கூடியது. அதிலும், பற்பல கட்சிக்காரர்கள் தத்தம் அபிப்பிராயங்களை வற்புறுத்தினர்கள். அதிலும் அபிப்பிராய பேதங்களால் கலவரங்கள் ஏற்பட்டன. அதிலும் முடிவான எந்தத் தீர்மானமும் நிறைவேறவில்லை. வேறு வழியில்லாமல் அதன் பிறகு, கிரன்ஸ்கி தன்னிஷ்டப்படி அரசாட்சியை நடத்தத் தீர்மானித்தார்.

## இரு கட்சிகள்

இவ்வாறு ருஷியாவில் நாடெங்கும் பஞ்சமும், குழப்பமும் தோன்றி ஜனங்கள் மிகுந்த துன்பத்தை யனுபவித்து வருகையில், கிரன்ஸ்கியின் அரசாங்கம் அவைகளை நீக்கி அரசாட்சியை நடத்த முற்றிலும் அசக்தமாயிருந்தது ஏனென்றால், கிரன்ஸ்கி வாஸ்தவத்தில் உயர்ந்த தேசபக்தியும், நல்லெண்ணமு முள்ளவராயிருந்த போதிலும், அவர் நடு நிலைமை தாங்கி, நாட்டிலுள்ள எல்லா வகுப்பாரையும் திருப்தி செய்ய முயற்சித்ததால், அவர் நினைத்த காரியங்களெவையும் கைகூடாமற் போயின. முடிவில், அவரால் எந்தக் கட்சியாரையும் திருப்தி செய்விக்க முடியாமல், எல்லோரும் அவர் நடவடிக்கைகளை எதிர்த்துக் குற்றங்கூறத் தலைப்பட்டார்கள். இதனால், அவர் அரசாங்கத்தை நடத்துவதும், மேன்மேலும் கடினமாயிற்று. அச் சமயத்தில், ருஷியாவில் இரண்டு தீவிரமான கட்சிகள் தோன்றி யிருந்தன. ஒன்று, பழைய ஜார் வர்க்கத்தினரது கட்சி. அவர்கள் யுத்தத்தை முடிவு வரையில் நடத்தியே தீரவேண்டு மென்றும், ஜார் சக்கரவர்த்தி, அநேக ராஜ்யங்களுடன் செய்திருந்த ஒப்பந்தத்தைப் பூரணமாக நிறைவேற்ற வேண்டுமென்றும், நாட்டின் அரசாட்சியைப் பழைய முறைகளிலேயே நடத்த வேண்டு மென்றும் வற்புறுத்தினர்கள். ஏனென்றால், இவ் வேற்பாடுகளில் அவர்களுக்கு மிகுந்த லாபமிருந்தது. இதனால் குடியரசென்ற பெயரை வைத்துக் கொண்டு, அவர்கள் தாமே முன்போல நாட்டின் சகல ராஜ்யாதிகாரங்களையும், உயர்பதவிகளையும் அனுபவித்து வரலா மென்று எண்ணங் கொண்டிருந்தார்கள். மற்றொரு தீவிரக் கட்சியார், தொழிற்சாலைக் கூலிகளும், சொந்த நிலமில்லாத விவசாயக் கூலி

களும், படையாட்களுஞ் சேர்ந்த கூட்டத்தினர் இவர்கள் என்னவாயினும், சமாதானமே அத்தியாவசியமென்று வற்புறுத்தினார்கள். சண்டையை நடத்துவதால் ருஷியாவிலுள்ள அற்ப ஜீவனும் அழிந்துபோகு மென்றும், அதனால் ருஷிய ஜனங்கள் எவ்வித லாபத்தையும் பெறமாட்டார்களென்றும், இங்கிலாந்து, பிரான்சு முதலிய சிநேக ராஜ்யங்களிலுள்ள வர்த்தகக் கூட்டத்தாரின் லாபத்திற்காக, ஏழை ருஷியர்கள் உயிர் தியாகஞ்செய்வது அனீதமென்றும், அவர்கள் வாதித்தார்கள். இரண்டாவதாக, அவர்கள் ருஷியாவிலுள்ள தொழிற்சாலைகளனைத்தும், தொழிலாளரின் நன்மையைக் கருதியே அவர்கள் இஷ்டப்படி நடத்தும்படிச் சட்டம் பிறப்பிக்க வேண்டுமென்றும் கூறினார்கள், கிராமங்களில் ஒவ்வொரு நிலச்சுவாந்தாருக்குச் சொந்தமான லக்ஷக்கணக்கான எக்கர் நிலங்களையும், அங்குள்ள ஏழை விவசாயிகளுக்குள் பங்கிட்டுக் கொடுத்துவிட வேண்டுமென்றும் வற்புறுத்தினார்கள்.

இவ்வாறு, ஒன்றுக்கொன்று விரோதமான இவ்விரு தீவிரக் கட்சிகளின் இடையில் அகப்பட்டுக்கொண்டு, கிரன்ஸ்கி எவர் பக்கத்திலும் சேர இஷ்டமில்லாதவராய், நடுநிலைமையில் அரசாங்கத்தை நடத்தலா மென்று வீண் நம்பிக்கை கொண்டு, தன்னால் கூடிய வரையில் முயற்சி செய்து வந்தார். ஆனால், மேலே கூறிய இரு கட்சியாரில் எவரும் கிரன்ஸ்கியின் அபிப்பிராயங்களுக்கிணங்கி நடக்கத்தயாராக விருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் ஒவ்வொருவரும் நாட்டில் தம் சக்தியையே பிரதானமாக்கி, அரசாங்கத்தைத் தாமே நடத்த வேண்டுமென்று ஆசைகொண்டிருந்தார்கள். இவ்விருவரையும் ஒன்றாக இணைப்பது கிரன்ஸ்கியால் சாத்தியமில்லாமற் போயிற்று. இவர்களில் எவரையும் தன் ஆதீனத்திற் குட்படுத்துவதும் அவரால் முடியவில்லை. கடைசியில், அவர் தன் நோக்கப்படி அரசாட்சியை நடத்தும் பொருட்டு, கடினமான முறைகளை அனுசரிக்கத் தீர்மானித்தார். இதனிடையில் ஜார் வர்க்கத்தினரான பணக்காரக் கட்சியார், கிரன்ஸ்கியின் அரசாங்கத்தை பலவந்தமாகக் கைப்பற்றும் பொருட்டு, தமக்குள் ஒரு அந்தரங்கக்

கமிட்டியை ஏற்படுத்தி, அதின் மூலமாக அந்தரங்கப் பிரசாரங்கள் செய்து வந்தார்கள். இவ்வாறே, தொழிலாளர் கட்சியாரும், ஒரு குறிப்பிட்ட தேதியில் அரசாங்கத்தை பலவந்தமாகக் கைப்பற்றும் பொருட்டு, தமக்குள் ஒரு அந்தரங்கக் கமிட்டியை நியமித்து, அதின் மூலமாக அந்தரங்கப் பிரசாரங்கள் செய்து வந்தார்கள். தொழிற்கட்சியார், எல்லா வெளியூர்களிலும் கிளைச் சங்கங்களை ஸ்தாபித்து, தாம் நினைத்த காரியத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாவற்றையும் செய்து விட்டு, ஓர் நல்ல சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தார்கள். இவ்வாறு, தனக்கு விரோதமாக அந்தரங்கக் கமிட்டிகள் தோன்றியிருக்கும் விவரத்தை கிரன்ஸ்கி யறிந்தார்.

## அடக்குமுறை

1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 4ந்தேதி கூடிய கிரன்ஸ்கியின் அரசாங்கச் சபையில், அவர் இவ் விஷயங்களைத் தெரிவித்து, தனக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்து வருவதாகச் சந்தேகித்த சில தொழிற் கட்சித் தலைவர்களைப் பிடித்துச் சிறையி லடைக்கும்படி வாரண்டுகள் பிறப்பித்தார். பீட்ரோகிராட் நகரத்தில் பிரசுரிக்கப்பட்டு வந்த தொழிற் கட்சிப் பத்திரிகையையும் நிறுத்தி விடும்படி அவர் கட்டளை பிறப்பித்தார். இவ் விஷயத்தில் அவர் பாரபட்சமாயிராமல், பணக்காரக் கட்சியாரது ஓர் பத்திரிகையையும் அடக்கி அவர்களிற் சிலரையுங்கூடப் பிடித்துச் சிறையிலடைக்கும்படி உத்தரவிட்டார். கிரன்ஸ்கி மேலே கூறிய நடவடிக்கைகளைச் செய்தது தான் தாமதம் இரு தீவிரக் கட்சியாரும் அவர் மீது அடங்காத ஆத்திரங் கொண்டார்கள். அவர்கள் முயற்சிகள் முன்னைக் காட்டிலும் பன்மடங்கு தீவிரமாயின, இரு கட்சியாரும், அரசாங்கத்தைக் கைப்பற்றத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

## நவம்பர் 7-ந்தேதி

இவ் விஷயத்தில் தொழிற் கட்சியாரே முதன் முதல் அடிவைத்தார்கள். அவர்கள் படையாளர் சங்கங்கள் மூலமாக பீட்ரோகிராடிலும், அடுத்திருந்த பட்டணங்களிலும்

வைக்கப்பட்டிருந்த காவற்படைகளை எளிதில் தம் கைவச மாக்கிக்கொண்டார்கள். அந்நகரத்தை யடுத்த பால்டிக் கடலி லிருந்த ருஷியக் கப்பற்படைகளையும் அவர்கள் தம் வசமாக் கிக்கொண்டனர். தொழிற் சாலைகளில் வேலைசெய்து வந்தவர் களும், அவர்கள் பக்கஞ் சேர்ந்தனர். ரெயில்வே தொழிலாள ரும் அவர்களுக்குதவியாக என்ன செய்யவும் தயாராக விருந் தார்கள். தொழிற் கட்சியார் தாம் சாதிப்பதாக ஜனங்களு க்கு முன் காட்டிய விஷயங்கள் மூன்று. அவையாவன:—
1. சமாதானம் 2. விவசாயிக ளெல்லோருக்கும் நில உரிமை. 3. தொழிற்சாலைகளில் தொழிலாளர் ஆதிக்கம். சண்டை நின்று சமாதானம் ஏற்பட்டுவிட்டால் படையாட்களுக்குச் சந்தோஷம் நிலத்தை எல்லா விவசாயிகளுக்கும் பங்கிட்டுக் கொடுத்து விட்டால், அவர்களுக்குத்திருப்தி தொழிற்சாலைக ளனைத்தையும் தொழிலாளரின் ஆதிக்கத்தின் கீழ் வைத்து விட்டால், அவர்களுக்கு வேறென்ன வேண்டும்? இம் மூன்று நோக்கங்களையும் தாம் நிறைவேற்றுவதாக, அறிக் கையிட்டதினால், தொழிற் கட்சியார் நாட்டிலுள்ள சகல ஏழைகளையும் தம்முடன் இணைத்து, அவர்கள் உதவியாலும், பலத்தாலும் அரசாங்கத்தைக் கைப்பற்ற இடமுண்டாயிற்று.

## சோவியத் பலவந்தம

1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 7ந் தேதி லேனின் என்னும் தொழிற்கட்சித் தலைவரின் கீழ் கூடிய அந்தரங்கக் கூட்டத்தில், கிரன்ஸ்கி அரசாட்சியின் அங்கத்தினரைப் பிடித்துச் சிறையிலடைத்து விட்டுத் தாமே அதிகாரத்தைக் கைப்பற்றுவ தென்று தீர்மானமாயிற்று. இதன்படி தொழிற் கட்சியின் அந்தரங்கக் கமிட்டியாரது உத்தரவின் கீழ், சில படையாளர் அரசாங்கக் காரியாலயத்திற்குச் சென்று, கிரன்ஸ்கியின் அரசாட்சி அங்கத்தின ரெல்லோ ரையும் பலவந்தமாகப் பிடித்து, வெவ்வேறு சிறைகளுக் கனுப்பி விட்டார்கள். கிரன்ஸ்கி ஒருவர் மாத்திரம் மோட் டாரிலேறி, உயிர்தப்பி ஓடிவிட்டார். பீட்ரோகிராட் நகரமும் அரசாங்கக் காரியாலயங்களும் தொழிற்கட்சியார் ஆதீனத் தில் வந்தன. கப்பற் படைகளும், அவர்கள் அதிகாரத்திலே

பே யிருந்தன, தமக்கு எதிராகக் கிளம்புவோரை பயமுறுத்துவதற்காக, சில பீரங்கிக் கப்பல்களை அவர்கள், நகரத்தை நோக்கி கடலில் நிறுத்திவைத் திருந்தார்கள். நகரக் காவற் படைகள் அவர்கள் ஆதீனத்தில் இருந்ததுமன்றி, தந்தி, டெலிபோன், ரெயில்வே முதலிய போக்குவரத்திற்குரிய சாதனங்களும் அவர்கள் கைவசமாகி விட்டன. தொழிற் கட்சியார் முன்னதாகவே அந்தரங்கத்தில் ஏற்பாடு செய்திருந்தபடி, நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அவர்களுடைய கட்சிப் பிரதிநிதிகள் பீட்ரோகிராட் நகரில் வந்து கூடினார்கள். அன்றைய தினம், அதாவது நவம்பர் 7ந் தேதி பகலிலேயே இரண்டாவது சோவியத் மகாநாடு கூடியது. தொழிலாளர், விவசாயிகள், படையாட்கள் இம் மூவருங் கூடிய கட்சியையே சோவியத் தென்று அழைப்பார்கள். இதுவரையில் நாம் தொழிற் கட்சியாரென்று கூறிவந்தது, இந்த சோவியத் கட்சியேயாகும். முதலாவது சோவியத் மகாநாடு பீட்ரோகிராட் நகரத்தில் கூடியதை நேயர்களறிவார்கள். அது அந்நகரத்தில் அவ்வருஷம் பிப்ரவரி மாதம் 28ந் தேதி உண்டான புரட்சிக்குப் பின், மார்ச்சுமாதம் முதல் தேதியில் கூடியது. அம் மகாநாடு கூடியது முதல், மேலே கூறிய மூன்று வகுப்பினராகிய தொழிலாளர், விவசாயிகள், படையாட்கள் முதலியோர், இது வரைக்கும் சிறிது சிறிதாகத் தம் பலத்தை விருத்தி செய்து கொண்டு வந்தார்கள். முதலாவது மகாநாடுகூடி, எட்டு மாதங்களுக்குள், அவர்கள் பலாத்காரமாக அரசாங்கத்தைக் கைப்பற்றக்கூடிய விதத்தில் தம் சக்தியை விருத்தி செய்து விட்டார்களென்பது நிதர்சனமாகின்றது.

## சோவியத் மகாநாடு

1917-ம் வருஷம் நவம்பர் மாதம் 7ந் தேதி பிற்பகலில் பீட்ரோகிராட் நகரத்தில் இரண்டாது சோவியத் மகாநாடு கூடியது. அதில் விஜயஞ் செய்திருந்த பிரதிநிதிகளெல்லோரும் வயதில் மிகவும் பால்யமானவர்களாகவே யிருந்தார்கள். அவர்கள் பூரணமாக சோவியத் கொள்கைகளையும், தொழிலாளர் ஆதிக்கத்தையும் ஆதரிப்பவர்கள். மகாநாடு ஆரம்பித்துச்

சிறிது நேரத்திற்குள், அப்பிரதிநிதிகளுள் மிதவாதிகளா யிருந்த ஓர் பகுதியார் அதன் நடவடிக்கைகளில் அதிருப்தி கொண்டு, எழுந்திருந்து போய் விட்டார்கள். மிகுதியா யிருந்த பிரதிநிதிகள் மகாநாட்டை நடத்தினர். அதில் மூன்று முக்கியமான தீர்மானங்கள் நிறைவேறின. (1) சண்டையை நிறுத்தி சமாதானஞ் செய்யும் பொருட்டு சிநேக ராஜ்யங்களாகிய, இங்கிலாந்து, பிரான்சு முதலியவைகளையும், சத்துருக்களாகிய ஜெர்மெனி, ஆஸ்டிரியா முதலியவைகளையும் கலந்து ஆலோசிக்கவேண்டும். (2)பின்னர், நிலங்களைப் பற்றி நிரந்தரமான சட்டங்கள் நிறைவேற்றி, அமுலுக்கு வரும் வரையில், இப்போது தற்காலிகமாக கிராமங்களிலுள்ள நிலங்களை கிராமப் பொதுவில் பயிரிட்டு கிராமத்தாரெல்லோரும் சமமாக அனுபவிப்பது. (3) தொழிற்சாலைகளின் நடவடிக்கைகளைப் பற்றிய சகல விஷயங்களும், தொழிலாளர் பிரதிநிதிகளாலேயே தீர்மானிக்கப் படவேண்டும். எல்லோருடைய கரகோஷங் களினிடையே இம்மூன்று தீர்மானங்களும் நிறைவேறிய பின், சீக்கிரத்தில் ஒரு குறிப்பிட்ட தேதியில் நாடெங்கும் பொதுத்தேர்தல் நடத்தி, ஒரு பார்லிமெண்டு சபையை கூட்டவேண்டுமென்ற தீர்மானமும் நிறைவேறியது. அது வரைக்கும் லேனின் தலைமையின் கீழ் நியமிக்கப்பட்ட அங்கத்தினர்கள் அரசாட்சியை நடத்தி வரவேண்டும். இவ்வாறு ருஷியாவில் புரட்சி தோன்றிய பின், மூன்றாவதாகிய சோவியத் அரசாங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. பழைய ஜார் சக்கிரவர்த்தியின் ஆட்சி குலைந்து விழுந்தது போல, அதன்பின் அமைக்கப்பட்ட கிரன்ஸ்கியின் அரசாங்கமும் குலைந்து விழுந்தது. எல்லாக் கட்சியாரையும் கொடுங்கோலால் அடக்கி வைத்திருந்த ஜார் அரசாங்கம் சிதறியது போல, எல்லாக் கட்சியாரையும் கூட்டி, ஒற்றுமையுடன் அரசாட்சியை நடத்த முயற்சித்த கிரன்ஸ்கியின் அரசாங்கமும் சிதறிப்போயிற்று. இப்போது தொழிற் கட்சியார், மற்றெல்லோரையும் நீக்கி விட்டுத் தமது சோவியத் ஆட்சியைத் தொடங்கினார்கள்.

---

லக்ஷ்மி பிரஸ், சென்னை, முதல் பதிப்பு 5000 பிரதிகள் (18-7-31)

# பித்தளை விளையாட்டுச் சாமான்கள்.



குழந்தைகளைக் குதூகலப்படுத்த இதைவிட விளையாட்டுக் கருவிகளில் சிறந்தது வேறொன்று மில்லை.

இன்றே உங்கள் அருமைக் குழந்தைக்காக ஒரு செட் ஆர்டர் செய்யவும்.

இந்த விளையாட்டு சாமான்கள், இந்துக்களாலும், மகமதியர்களாலும், கிறிஸ்தவர்களாலும் ஆங்கிலேயர்களாலும் மதிக்கப் பெற்றவை.

| | | | | |
|---|---|---|---|---|
| நெ. 1 ஜோடிப்பு விலை ரூ. | 4 | 8 | 0 |
| நெ. 2 ,, ,, ,, | 3 | 4 | 0 |

கே. எஸ். முத்தையா கம்பெனி, :: காசி.

# "காந்தி" அணா பிரசுரம்.

ராஜீய அறிவை ஜனங்களுக்கு விருத்தி செய்யும் நோக்கத்துடன் "காந்தி" அணா பிரசரம் என்ற பெயரால், பல முக்கிய நூல்களை ஒரு அணா விலையில் பிரசுரிக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். கூடிய சீக்கிரத்தில் ஒருவாரத்திற்கு ஒரு பிரசுரம் வீதம் வெளியிட எண்ணியிருக்கிறோம். தங்கள் ஊரில் இப்பிரசுரங்களை ஏராளமாய்ப் பரப்ப ஏற்பாடு செய்ய வேண்டுகிறோம். அப்படிச் செய்வதால் தங்களுக்கு கமிஷன் கிடைப்பதுடன நமது நாட்டு மக்கள் கண் விழிப்பதற்கு பெரிய உதவி செய்த புண்ணியமும் கிடைக்கும். 100 பிரதிகள் வாங்கினால் 100க்கு 25 வீதம் கமிஷன் கொடுக்கிறோம். ரயில் பார்சல் செலவு எங்களைச் சேர்ந்தது.

தபால் மூலம் வரவழைக்க விரும்பினால் நூற்றுக்கு விலை ரூ. 4—8—0. தபால் செலவு தங்களையே சேரும். அதிகம் பிரதிகள் வாங்கினால் அதிக கமிஷன் கொடுப்போம், விவரத்திற்கு எழுதவும் வேண்டியவர்கள் தங்கள் பெயரை எங்களிடம் பதிவுசெய்து கொண்டால் ஒவ்வொரு புத்தகமும் வெளியானவுடன் தெரிவிப்போம். வேண்டிய பிரதிகளுக்கு முன் பணம் அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

"காந்தி" முதல் பிரசுரம் பண்டித ஜவார்லால் சரித்திரம். 2-வது பிரசுரம் சோவியத் ருஷியா என்ற ருஷிய புரட்சி. 3-வது பிரசுரமாகிய பாபு சுபாஷ சந்திரபோஸ் அச்சிலிருக்கிறது.

## கிடைக்கும் நூல்கள்.

### "காந்தி" பிரசுரம்.

| | | | |
|---|---|---|---|
| ஜவார்லால் சரித்திரம் | 0 | 1 | 0 |
| சோவியத் ருஷியா | 0 | 1 | 0 |

தனிப்பிரதி வேண்டுவோர் கிரயத்துடன் பிரதி 1க்கு தபால் செலவுக்கு அரைஅணா ஸ்டாம்பு சேர்த்து அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

"காந்தி" ஆபீஸ்,

11, ஆண்டர்சன் தெரு, சென்னை.